


Jeeva Amirdham Tamil Monthly

# ஜீவ அமிர்தம்

ஆன்மீக அரசாங்கம்

சித்தர்களின் மகான்களின் தமிழ் மாத இதழ்

மலர் - 9 இதழ் - 3 கார்த்திகை - மார்கழி டிசம்பர் - 2022 விலை - 50
Vol - 9 Issue - 3 December- 2022 Price - 50



சாமிகள் யாரை அடிப்பார்? திட்டுவார்?

ஓடாத தேரை ஓட்டி விட்டார்

இயல்புடன் இரு! இருப்பதுடன் இரு!!

சிவராம சுந்தரம் (எ) பம்பைச் சாமிகள்

நன்றியோடு வாழு.. வாழ விடு..!

யார் உண்மையான ஆன்மீகவாதி

சாதி அழுக்கோடு சித்தர்களை வணங்காதே!

எல்லாம் உங்களின் செயலே!

பனை அறுக்கும் வினை...

நுரையீரலில் நிக்கோட்டின் அகற்றும் வெள்ளரி

ஆவாரம்பூ ஒரு அற்புத மூலிகை

சித்தர்கள் அருளிய வாழ்வியல் வழிகாட்டி



# ரெட்டியப்பட்டி சாமிகள்

நெல்லை விளாத்திகுளம் புதூருக்குப் பக்கத்தில் உள்ளது ரெட்டியப்பட்டி. நெல்லை மாவட்டத்து மக்களால் ரெட்டிப் பட்டி சாமிகள் என்று அன்புடன் அழைக்கப் படுபவர் இந்த சித்தர்! பில்லி, சூன்யம், பேய், பிசாசு போன்ற எந்த பிரச்னையாக இருந்தாலும் அது சம்பந்தப்பட்ட அந்த வீட்டிற்குள் இவர் காலடி எடுத்து வைத்து விட்டால் போதும், உடனே துர்சக்திகள் விலகி ஓடிவிடும். அவரது இந்த அமானுஷ்ய சக்திகளால் குணமடைந்தோர் ஏராளம்! நீண்ட தாடி... தீட்சண்யமான பார்வை... வெள்ளை வேட்டி... இவைகள் தாம் இச்சித்திரின் அடையாளம்.

அதிகாலை நாலு மணிக்கெல்லாம் எழுந்து குளித்து நெற்றி நிறைய விபூதி பூசிக்கொண்ட கோலத்துடன் நடக்க ஆரம்பித்து, பொழுது புலர்வதற்குள் அந்த ரெட்டியப்பட்டி கிராமம் முழுவதுமாக சுற்றி வலம் வந்து விடுவார் இவர்.

அப்படி இவர் புறப்பட ஆரம்பிக்கை யிலேயே தன் எதிரே சந்திக்கப் போகும் நபர்கள் யார் என்பதையும், அவர்களது பிரச்னைகளைப் பற்றிய விஷயங்களையும் முன்னமே தெரிந்துகொள்வார். அன்று மதுரை வடக்கு மாசி வீதியிலிருந்த ஒரு மிராசுதாரின் இல்லம். அவ்வீட்டின் வாயிற்படியில் சித்தர் காலடி எடுத்து வைத்த அடுத்த நொடியில், வாசற்படி மேலிருந்த அந்த மரத்துண்டு டமாலென்று கீழே விழுந்து உடைந்து போனது. இக்காட்சியைக் கண்டு அவருடன் வந்த சீடர்களும் மிராசுதார் குடும்பமும் திகைத்துப் போய் நிற்க, சாமிகள் மேலே வாசற்படி விட்டத்தை தன் அனல் கக்கும் பார்வையால் கூர்மையாகப் பார்த்தார். 'மரியாதையாக இங்கிருந்து போய்விடு' என்று அவர் சொல்லிக்கொண்டிருந்த போதே மேலிருந்து அந்த சப்தம் மிகத் தெளிவாகக் கேட்டது. அருகிலிருந்தோர் அனைவரும் அடங்கிப் போய் நிற்க, 'நீ சொன்னால் கேட்க மாட்டாய்.. உன்னை விரட்டினால் தான் வழிக்கு வருவாய்... உன்னை என்ன செய்கிறேன் பார்' என்றவாறு தன் இடுப்பில் முடித்து வைத்திருந்த சிறு பையிலிருந்து சிறிது திருநீறை எடுத்து ஏதோ முணு முணுப்பு மேலே அடுத்த விநாடி அந்த இல்லத்தில் இருந்த ஏதோ ஓர் அறையில் கண்ணாடி ஒன்று நொறுங்கி விழுந்தது.

சற்று நேரத்திற்குப் பின் சாந்தமடைந்த சித்தர் புன்னகைத்தபடி உள்ளே நுழைய, அனைவரும் அவரைப் பின் தொடர்ந்து நடுக்கூட்டத்திற்கு வந்தனர். கூடத்திற்கு வந்து அங்கிருந்த இருக்கையில் அமர்ந்த ரெட்டியப்பட்டி சித்தருக்குள் ஏதோ ஒன்று உறைத்தது.

மிராசுதாரரின் மகனை நோக்கிய சித்தர், 'நீ கூப்பிட்டால் அடுத்த நிமிடம் உன் குரலுக்கு மதிப்புக் கொடுத்து உன் மனைவி வருவாங்களா' என்றார்.

'முடியாது சாமி... இரண்டொரு மாதங் களாக கால்கள் இரண்டும் செயலிழந்து போய் படுத்தபடுக்கையாகக் கிடக்கும் அவளால் எப்படி வர முடியும்? என்று கண்ணீருடன் கூறியவரை அன்புடன் பார்த்தார் சித்தர். 'ஏன் முடியாது? நான் வரவழைக்கிறேன். உங்கள் குரலுக்கே நான் வரவழைக்கிறேன்' என்றவர், அனைவரையும் அழைத்துக்கொண்டு வெளியே வந்தார்.

அருகிலிருந்த தன் சிஷ்யனின் காதில் ஏதோ கூற, அவன் அந்த வீட்டிற்குள் நுழைந்தான். அவன் உள்ளே நுழைந்த அடுத்த நொடியில் வீட்டிலிருந்து நெருப்பு எரிவதைக் கண்டு பயந்து உள்ளே நுழையப் போன மிராசுதாரையும், அவரது மகனையும் 'வேண்டாம்' என்று சைகை செய்து மனைவியைக் கூப்பிடு' என்று பார்வையால் சித்தர் சம்மதம் தர, மிராசுதாரின் மகன் தன் மனைவியை பெயரிட்டு அழைத்துக் கதறினான்.

அடுத்த விநாடி அந்த ஆச்சரியம் நிகழ்ந்தது. அதுநாள் வரை படுத்த படுக்கையாகக் கிடந்த அந்தப் பெண், வாசற்கதவை மெல்லப் பற்றி தடுமாறிக் கொண்டு ஓடி வந்து, தன் கணவன் முன்பாக சரிந்து விழ, தன் மனைவியை அப்படியே பற்றிக்கொண்ட மிராசுதாரின் மகன், ஆனந்தத்துடன் சித்தரை நோக்கி கரம் கூப்பி தொழுதார். தான் எப்படி இங்கு வெளியே வந்து சேர்ந்தோம் என்ற உணர்வு எழ, நிலைமை புரிந்து போனது அப் பெண்ணுக்கு. அவளும் தன் கணவனுடன் சேர்ந்து சித்தரை கையெடுத்து வணங்கினாள்.

கணவன்–மனைவி இருவரையும் ஆசீர்வதித்த சித்தர், தம் இடுப்பில் வைத்திருந்த திருநீற்றில் சிறிது அள்ளிக்கொடுத்து 'விடியற்காலையில் எழுந்து குளிர்ந்த நீரில் குளித்து விட்டு இதனைப் பூசிக்கொள்ளுங்கள். இரண்டு வாரத்திற்குள் நீங்கள் இன்னும் திடமாக நடக்க ஆரம்பித்து விடுவீர்கள் என்று கூறிவிட்டு அங்கிருந்து புறப்பட்டு திருச்சி மாவட்டம் குளித்தலையை நோக்கிப் பயணமானார் தமது அடுத்த வேலையைக் கவனிக்க.

இதே போல் இன்னுமொரு சம்பவம் திருக்கோயிலுரை அடுத்த அனந்தூர் கிராமத்தைச் சேர்ந்த ஒரு பெரியவரின் உடல் அனலாய் கொதிப்பதை நாடி பார்த்து தெரிந்து கொண்ட சித்தர், அவருக்கு அருகிலிருந்த கிணற்றுத் தண்ணீரைத் குடிக்கும்படி சொல்ல.. பெரியவரின் உடல் இன்னும் அனலாகக் கொதித்தது. இது கண்டு புன்னகைத்த சித்தர் இவரை விடியற்காலை 4 மணிக்கு பச்சைத் தண்ணீரில் குளிக்க வையுங்கள். எல்லாம் சரியாய் போய்விடும் என்று சொல்லிவிட்டு அங்கிருந்தும் போய்விட்டார். இதைக் கேட்ட அங்கிருந்தவர்களுக்குப் பெருத்த கோபம். 'ஏற்கெனவே இவர் ஜன்னியில் அவஸ்தைப்பட்டுக் கொண்டி ருந்தார். இவருக்குக் முடிக்க யாராவது கிணற்று தண்ணீரைக் கொடுப்பாங்களா? இதுல வேற காலைல பச்சைத் தண்ணியிலே குளிக்கணுமாம். வேற வினையே வேண்டாம்' என்று மறுத்தவர்கள் சித்தரைத் திட்டத் தொடங்கி விட்டனர்.

சித்தரின் மீது அசையா நம்பிக்கை வைத்திருந்த அந்தப் பெரியவரின் அண்ணன் மகனோ,அதுபற்றிஎதுவும்கவலைப்படாமல் பெரியவரை விடியற்காலையில் அழைத்துச் சென்று குளிப்பாட்ட, அடுத்த நொடியில் பெரியவரின் உடம்பில் இருந்த சூடு அத்தனையும் பறந்துவிட, அவராகவே தண்ணீர் எடுத்துக் குளிக்க ஆரம்பித்தார். குளித்து முடித்தவுடன் பூஜையறைக்குச் சென்று விபூதி இட்டுக்கொண்டு வெளியே வந்தவர் சித்தரைத் தேடியபோது, அங்கே ஒரு பாறையின் மீது அமர்ந்துகொண்டிருந்த சித்தர் அவர்களது உணர்வுகளைப் புரிந்துக் கொண்டவர் போல் புன்னகைத்தார். அதில் ஓராயிரம் அர்த்தங்கள் நிறைந்திருந்தன.

விடியற்காலை நான்கு மணி முதல் ஐந்து மணிக்குள் எழுந்து குளிர்ந்த நீரில் குளிப்பது, திருநீறுபூசி இறைவனை வணங்குவது, நோய் நொடி எது வந்தாலும் மருந்து மாத்திரை எதுவும் உண்ணாமல் திருநீறு மட்டுமே உண்ணுவது. சூது, களவு, மது, பொய், துர்சிந்தனை போன்ற பஞ்சமா பாதகங்களைத்தவிர்ப்பதுபோன்றவைகளை மக்களுக்கு அறிவுறுத்தி வந்தவர் இந்த ரெட்டியப்பட்டி சித்தர். இந்த மகானின் ஜீவ ஆலயம் விளாத்திகுளம் அருகேயுள்ள ரெட்டியப்பட்டி கிராமத்தில் உள்ளது.

**வாருங்கள் தரிசிக்கலாம்!!**
**சிவதரிசனத்தைக் காணலாம்!!**

அருப்புக்கோட்டை–விளாத்திகுளம் சாலையில் உள்ள 30கி.மீல் நாகலாபுரம் உள்ளது. இறங்கி யிருந்து 1/2கி.மீ ரெட்டியப்பட்டியில் சமாதி. விருதுநகர் மாவட்டம்

